[5th May 1962

SRI S. RAMASAMY NAIDU : கனம் அமைச்சர் அவர்கள் வீடு இல்லாதவர்களுக்கு இந்தத் திட்டம் உதவி அளிக்கும் என்று சொன்னார். வருஷம் 6,000 ரூபாய் வருமானம் உள்ளவர்கள் வீடு இல்லாமல் இருப்பார்களா என்ற சந்தேகம் இருக்கிறது. ஆகவே நல்ல கட்டிடம் இல்லாமல் கூரை வீடாக இருந்தால் அவர்களுக்குக் கொடுக்கலாமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : வருஷ வருமானம் 6,000 ரூபாய்க்குக் குறைவாக இருக்கிறவர்களிலும் ரொம்பப் பேர்கள் வீடுகள் இல்லாமல் இருக்கிறார்கள் என்பதையும் தெரிவிக்க விரும்புகிறேன்.

*Government Arts College, Ootacamund (Hostel)*

*35 Q.—SRI J. MATHA GOWDER : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உதகை சர்க்கார் கலைக் கல்லூரிக்கு சொந்தமாக மாணவர் தங்கும் விடுதி இல்லையென்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(இ) அப்படியானால், இதுவரையிலும் சொந்தக் கட்டிடம் கட்டாத காரணம் என்ன ?

(உ) எப்போது கட்டி முடிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) & (உ) The construction of a permanent building for the College is under consideration. It is proposed to utilise the existing college building for the hostel after the permanent building for the College is constructed.

SRI J. MATHA GOWDER : ஸார், உதகை கல்லூரி மாணவர்களுக்கு விடுதி கட்டுவதற்கு என்று எவ்வளவு எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல முடியுமா ? ஏற்கெனவே எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டது. அப்படி எஸ்டிமேட் தயாராக இருந்தால் அது எவ்வளவு? அந்த எஸ்டிமேட் தயாராக இருந்தால் எப்பொழுது அந்தக் கட்டிடத்தைக் கட்ட ஆரம்பிக்க உத்தேசம் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : டிசம்பர் 1961-ம் ஆண்டிலேயே எஸ்டிமேட் தயாரிக்கப்பட்டு ஆறு லட்சம் ரூபாய் செலவில் 100 மாணவர்களுக்கு ஹாஸ்டல் வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்குப் பிறகு மீண்டும் அதைப் பற்றி யோசனை செய்து அதற்கு என்று தனியாக கட்டிடம் கட்ட வேண்டாம் என்றும், கல்லூரிக்கு என்று தனியாக ஒரு கட்டிடம் கட்டி விட்டு இப்பொழுதுள்ள கல்லூரி கட்டிடத்திற்கே சில சீர் திருத்தம் செய்து அதில் ஹாஸ்டலை வைக்கலாம் என்று முடிவு

5th May 1962]

செய்யப்பட்டது. ஆகவே கல்லூரிக்கு என்று தனியாக கட்டிடம் கட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது. இப்பொழுது காலேஜ் இருக்கும் கட்டிடத்திலேயே ஹாஸ்டலை வைப்பது என்றும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

SRI T. KARCHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, உதகை கல்லூரியில் பெண்களுக்கு என்று ஹாஸ்டல் இல்லாத காரணத்தால் பெண்கள் அந்தக் கல்லூரியில் சேர்ந்து படிக்க முடியாமல் இருப்பதால் கனம் அமைச்சர் அவர்கள், இப்பொழுது கட்டக்கூடிய கட்டிடத்தில் பெண்களுக்கு என்று தனியாக இட வசதி செய்து கொடுக்கும் அளவில் கட்டிடத்தைக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்வார்களா ? அப்படிக் கட்டி பெண்களுக்கு தனியாக ஹாஸ்டல் வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போதிய பெண்கள் கல்லூரியில் சேர்ந்து படிக்க முன் வந்தால் அவர்களுக்கு தனியாக யாக வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்படும். தனியாக ஹாஸ்டலும் அமைக்கப்படும்.

SRI J. MATHA GOWDER : இப்பொழுதிருக்கும் கல்லூரிக் கட்டிடத்தை ஹாஸ்டலாக மாற்றவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள். ஆனல், கல்லூரிக் கட்டடம் கட்டி முடிக்கப்பட்டால்தான் ஹாஸ்டலுக்கு விமோசனம் ஏற்படும் என்ற நிலைமை இருக்கிறது. ஆகவே, தயவுசெய்து, கல்லூரிக் கான கட்டட வேலையைத் துரிதப்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் முன் வருவார்களா ? கல்லூரி கட்டட வேலை எப்போது ஆரம்பிக்கப்படும் ? 9-00 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கல்லூரிக்குக் கட்டடம் கட்டுவது பற்றி தனியாகக் கவனிக்கப்பட்டு வருகிறது. அதில் அனுவசியமான தாமதம் ஒன்றும் இருக்காது.

*Taxation by Municipalities*

* 36 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon the Minister for Municipal Administration be pleased to state—

(*a*) whether there is any proposal to appoint a committee to examine the rationale of taxation by the municipalities and to suggest proposals for augmenting their revenues; and

(*b*) if so, the details thereon?

THE HON. SRI S. M. A. MAJID : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI M. KALYANASUNDARAM : பல நகரங்களில் வீட்டு வரி விதிப்பது சம்பந்தமாக ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. குறிப்பாக, ஏழை எளியவர்கள் வசிக்கக் கூடிய வீட்டுக்கு அதிக வரி போடப்பட்டிருக்கிறது என்ற புகார் அரசாங்கத்திற்கு